**Sri K. GOPALA KOUNDER**: *இந்த மாதிரி 15 மைல் நீளமுள்ள மெட்டல் இல்லாத ரோடுகளுக்கு பஸ் ரூட்டுகள் கொடுக்கிறார்களா ?*

The Hon. Sri V. RAMIAH : *போக்குவரத்திற்கு லாயக்கான ரோடுகள் இருக்கிறதென்று என்ஜினியரிங் இலாகா அதிகாரிகள் ஆராய்ந்து உத்தரவு போட்டால் அங்கு கொடுப்பதற்கு கஷ்டம் இருக்காது.*

**Sri V. SUBBIAH**: *இந்த 15 மைல் நல்ல ரோடுகள் இருக்கும் இடங்களில் புத்த புதிதாக பஸ் ரூட்டுகள் கொடுப்பதற்கு அரசாங்க உத்தரவு உண்டா ?*

**The Hon. Sri V. RAMIAH**: *இப்பொழுது 15 மைல் நல்ல ரோடுகள் இருக்கும் இடங்களில் பஸ் ரூட்டுகள் கொடுக்க வேண்டுமென்ற உத்தரவு இருந்தாலும், அதிகமான பஸ்கள் விட வேண்டுமென்ற கோரிக்கை இருந்தாலும்கூட, அதிகப்படுத்தலாமா வேண்டாமா என்பனபோன்ற எல்லா விஷயங்களையும் பரிசிலனை செய்து பார்த்துத்தான் எடுத்துக்கொள்ளமுடியும்.*

**Sri A. GOVINDASAMY**: *சிதம்பரத்தில் தேர்தல் காலத்தில் ஒரு காங்கிரஸ்காரருக்கு பஸ் ரூட் கொடுத்திருப்பது உண்மையா ?*

Mr. SPEAKER : The question is out of order.

**Sri P. S. K. LAKSHMIPATHI RAJU**: *ஆந்திரா ராஜ்யத்தில் திருப்பதி தேவஸ்தானத்திற்கு பஸ் ரூட் கொடுத்திருப்பதுபோல், சென்னை ராஜ்யத்திலும் பழனி தேவஸ்தானத்திற்கும் பஸ் ரூட் கொடுக்க உத்தேசம் உண்டா ?*

**Mr. SPEAKER:** *கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட வேண்டும்.*

*Sakkirapuram Harijan Colony*

* 17 Q.—Sri K. GOPALA KOUNDER : *கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) செஞ்சி தாலுகா, சக்கராபுரம் ஹரிஜன காலனியில் ஐம்பது வீடுகள் கட்ட சாங்ஷன் செய்து இருப்பது வீடுகள் முடிக்கப்பட்டு முப்பது வீடுகள் கட்டப்படாமல் இருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?*

*(ஆ) கட்டப்படாமல் காலதாமதமாவதற்கு காரணம் என்ன ?*

*(இ) எப்பொழுது கட்டி முடிக்கப்படும் ?*

The Hon. Sri P. KAKKAN : ( அ ) Yes, Sir.

( ஆ ) Originally it was proposed to construct 50 houses in that village during 1956–57. As the acquisition of the required

8th August 1960]

extent of land had been questioned in a court of law, only 20 houses could be taken up for construction during that year. The Government in the mean-time took a decision that not more than 20 houses shall be generally constructed in a Harijan colony. In view of this, the construction of 30 additional houses had to be abandoned.

(இ) Does not arise.

**Sri K. GOPALA KOUNDER :** 1960-61-லிலாவது அந்த வீடுகளைக் கட்டி முடிக்க முடியுமா? இந்த விஷயம் சுமார் நான்கு வருஷங்களாக பின்தங்கியதாக இருக்கிறது. ஆகையால் இவைகளை சீக்கிரம் நிறைவேற்ற சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்குமா?

**The Hon. Sri P. KAKKAN :** கேள்வியைத் திரும்பவும் போடும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri K. GOPALA KOUNDER :** ஐம்பது வீடுகள் கட்டப்படுவதாக இருந்தது. இருபது வீடுகள்தான் கட்ட முடிந்தது. இன்னும் முப்பது வீடுகள் பாக்கி இருக்கிறது. இவைகளை 1960-61-ம் வருஷத்திலேயே கட்டி முடிப்பார்களா?

**The Hon. Sri P. KAKKAN :** ஐம்பது வீடுகள் கட்டுவதற்கு உத்தேசம் முதலிலே இருந்தது. அந்த இடத்திலே இருபது வீடுகள்தான் கட்டப்பட்டன. நிலச் சொந்தக்காரர்கள் தகராறு செய்து கோர்ட்டுக்கு அப்பீல் செய்து விட்டார்கள். அப்பீல் டிஸ்மிஸ் செய்யப்பட்டது. காம்பன்சேஷன் பொறுத்தவரையில் கோர்ட்டிலே இன்னும் வழக்குகள் இருக்கின்றன. ஆகையால் தான் இன்னும் முப்பது வீடுகள் கட்ட முடியாமல் இருக்கின்றன. வழக்குகள் முடிந்த பிறகுதான் அவைகளைக் கட்ட கவனம் எடுத்துக் கொள்ளப்படும்.

*Complaint against a Collector*

*** 18 Q.—Sri V. K. KOTHANDARAMAN :** கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) குந்தா திட்டத்திற்காக நிலம் வாங்கினது சம்பந்தமாய் நீலகிரி ஜில்லா கலெக்டர் மீது திரு. வி. கே. கோதண்டராமன், எம்.எல்.ஏ., அவர்களிடமிருந்து புகார் ஏதேனும் வந்ததா?

(ஆ) அப்படியாயின், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** (அ) No complaint was received from Sri V. K. Kothandaraman, M.L.A., against the Collector of the Nilgiris in regard to the purchase of lands for the Kundah Hydro-Electric Scheme.

(ஆ) Does not arise.